श्रीः

श्री शङ्करभगवत्पादविरचितं

॥ गोविन्दाष्टकम् ॥

ஸ்ரீ சங்கரபகவத்பாதர் அருளிய

# கோவிந்தாஷ்டகம்

தேவநாகரி, தமிழ் லிபிகளில் ஸம்ஸ்கிருத மூலமும்
தமிழ் பொழிப்புரையும் கருத்துரையும்
அடங்கியது.

உரையாசிரியர் :

நா. ரகுநாதய்யர், எம்.ஏ.

([illegible] 'ஸிந்து' [illegible] ஆசிரியர்)





ஜோதி நிலையம்

சென்னை - 18

ஸ்ரீகாஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீசந்திரசேகரேந்திர
ஸரஸ்வதி ஸ்ரீபாதாள் பீடாரோஹண
வைர விழா வெளியீடு—5


வெளியிடுபவர் :

ஏ. கே. ஜயராமன்

முதற் பதிப்பு
உரிமை பதிவு
பாமதி நூல்கள் 5
விலை 40 பைசா

அச்சிட்டது :
ஆர்ஜி ப்ரிண்டர்ஸ்,
126. ராயபேட்டை ஹைரோடு
சென்னை-4.

20-3

உ

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு

# ஸ்ரீ சங்கராசார்யஸ்வாமிகள் மடம், காஞ்சீபுரம்

முகாம்:
ப்ரோதத்தூர்
கடப்பை ஜில்லா




தேதி 20—1—67

பரமேச்வரனின் அவதாரமாக ஆவிர்பவித்து துர்மதங்களை கண்டித்து, அத்வைத தத்வத்தையும், ஷண்மதங்களையும் நிலைநிறுத்தி ஜனங்கள் கடைத்தேறுவதற்காக ப்ரகரண க்ரந்தங்களையும், பல்வேறு பகவன் மூர்த்திகளைப் பற்றிய ஸ்தோத்ரங்களையும் இயற்றி மஹோபகாரம் செய்துள்ள ஸ்ரீபகவத் பாதாசார்யாள் அநுக்ரஹித்துள்ள ஸ்தோத்ரங்களை தகுந்த வித்வான்களைக் கொண்டு தமிழில் மொழி பெயர்க்கச் செய்து, சென்னை ஆழ்வார்பேட்டை ஜோதி நிலயத்தின் மூலம் ஸ்ரீ ஜயராமன் வெளியிட ஆரம்பித்திருப்பதை அறிந்து ஸந்தோஷிக்கிறோம்.

பக்தர்கள் இந்நூல்களின் மூலம் பொருளுணர்ந்து பகவன் மூர்த்திகளை பஜித்து எல்லா மங்களங்களையும் அடைவார்களாக.

நாராயணஸ்ம்ருதி

௨௦-௩

# ஸ்ரீ ஆசார்யாளின் அருள்வாக்கு

## ஸ்தோத்ரத்தின் அவசியம்

ஆதி சங்கர பகவத்பாதர்கள் ஈச்வர அம்சமாக இக் கலியில் தர்மத்தைக் காக்க அவதரித்தார்கள். அவர்கள் தமது வாழ்க்கையில், மாத்ருபக்தி, பித்ருபக்தி என்றால் என்ன என்பதை நடத்திக் காட்டினார்கள். மாத்ருபக்தி பித்ருபக்தி மட்டும் இருந்தால் போதாது என்று குரு பக்தியின் அவசியத்தையும் நமக்கு எடுத்துக்காட்டி, பிறகு ஈச்வர பக்தி இன்னும் அவசியம் என்று நிரூபித்துக் காட்டியுள்ளார்கள்.

சகல தெய்வாம்சங்களுக்கும் நமதாசார்யாள் ஸ்தோத்ரங்கள் செய்தருளி இருக்கிறார்கள். தக்ஷிணாமூர்த்தி, ஈச்வரன், அம்பிகை, சுப்ரமண்யர், விநாயகர், விஷ்ணு, ஆஞ்சநேயர் இவர்களைப் பற்றி இன்னும் அனேக ச்லோகங்களைச் செய்திருக்கிறார்கள். மேலும், விஷ்ணுவைக் குறித்து 'ஹரி மீடே' என்னும் ஸ்தோத்ரமும் செய்துள்ளார்கள்.

'ஹரி' என்றால் விஷ்ணு. 'ஈடே' என்றால் ஸ்தோத்ரம் செய்தல் என்று பொருள். அதில் முழுவதும் வேதாந்த தத்வங்கள் அடங்கியுள்ளன.

மேலும் பரமாசார்யர்கள் நான்கு நான்கு வரிகளடங்கியதும் கடைசி வரியில் வேத வாக்யத்தை அமைத்தும் "வேத பாதஸ்தவம்" என்னும் அரிய க்ரந்தத்தை இயற்றியுள்ளார்கள். ஆதிசங்கரர் செய்துள்ள ஸ்தோத்ரங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலனைக் கொடுக்கக் கூடியது. ஒவ்வொருவரும் அவரவர்களுக்கு விருப்பமான ச்லோகத்தைப் படிக்கலாம். ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர்கள் செய்துள்ள க்ரந்தங்கள் அனைத்தையும் நாம் படித்து அறிந்து கொள்ள நமது ஆயுள் காலம் முழுவதுமே போதாது.

ஆதலின் தங்களுக்கு விருப்பமான ஏதாவது ஒரு தெய்வத்தின் ஸ்தோத்ரத்தையாவது ஒவ்வொருவரும் படித்து அதன் பலனை அனுபவிக்க வேண்டும். எந்த தெய்வத்தின் ஸ்தோத்ரமானாலும் பலன் ஒன்றுதான்—உதாரணமாக வீட்டில் முறுக்கு, தேன்குழல், சீடை முதலிய பலவித பக்ஷணங்கள் செய்கிறார்கள். ஒவ்வொருவருக்கு ஒருவிதமான பக்ஷணம் பிடிக்கும். ஆனால் எல்லாவற்றிற்கும் மூல காரணம் மாவுதான். ஆகவே பக்ஷணத்திற்கு தக்கபடி ருசிமாறுகிறது. ஆதலால் எல்லோரும் தங்களுக்கு இஷ்டமான ஒரு ஸ்தோத்ரத்தைப் பாராயணம் செய்து பலனடையும் பொருட்டு நமது பரமாசார்யர்கள் அனேக அரிய ஸ்தோத்ரங்கள் செய்திருக்கிறார்கள்.

ஆதலின் எல்லோரும் ஆசாரிய க்ரந்தங்களைப் படித்து மனனம் செய்ய வேண்டும். மேலும் குழந்தைகளுக்கும் சிறு வயதிலிருந்தே இவ்வித ஸ்தோத்ரங்களைக் கற்பிக்க வேண்டும். இதுவே நாம் அவர்களுக்கு அளிக்கும் மூலதனமாகும்.

பக்தியால் தான் கடைத்தேறலாம் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. பக்தியால் ஆத்மாவுக்கு க்ஷேமம் ஏற்படும். பக்தி வளர ஸ்தோத்ரங்களை படிக்க வேண்டியது அவசியம்.

---

# முகவுரை

*இளம் பிராயத்திலிருந்து எனக்கு பகவத்பாதாசார்யர் களுடைய "கோவிந்தாஷ்டகத்தில்" தனியான ஈடுபாடு இருந்து வந்தது. இதற்கு அதன் ஓசை நயமும் சந்தத்தின் கவர்ச்சியும் காரணமாயிருந்திருக்கலாம். இந்த ஸ்தோத்ரத் தின் அர்த்தத்தை தெரிந்து கொள்ள வேண்டுமென்ற அவா ஏற்பட்ட காலத்தில், அதிலடங்கிய பல புதிர் போன்றும், ஒன்றுக்கொன்று முரண் பட்டவை போலும் தோன்றின சொற்கள் கவனத்தை ஈர்த்தன. உதாரணமாக 'ஆகாசம்— அனுகாசம்', 'அநாயாஸம்—பரமாயாஸம்' முதலியன ஒரே பொருளுக்கு எப்படிப் பொருந்தும் என்ற கேள்வி மனதில் எழுந்தது. ஆநந்தகிரி முனிவரின் வியாக்யானத்தில் இவை கள் தெள்ளென விளக்கப்பட்டிருப்பதைக் கண்டபோது அதைத் தமிழில் அநுவாதம் செய்யவேண்டுமென்ற எண் ணம் தோன்றிற்று. 'காமகோடி பிரதீபம்' என்ற மாத வெளியீட்டில் அந்த அநுவாதத்தை இரண்டு வருஷங் களுக்குமுன் வெளியிட்டேன். இப்பொழுது நமது காஞ்சி பரமாசாரியர்களின் அனுக்ரஹத்தை முன்னிட்டு அப்பெரி யாரின் வைர விழா சமயத்தில் காணிக்கையாய் ஸமர்ப்பிக்க எண்ணி ஸ்ரீ ஏ. கே. ஜயராமன் அறுபது ஸ்தோத்திரங் களின் தமிழாக்கத்தை வெளியிடமுன் வந்திருப்பதால், இந்த கோவிந்தாஷ்டக உரையையும் அந்த அறுபதில் சேர்த்துக் கொள்ள விரும்பினார். இந்த மங்கள காரியத்தில் பங்கெடுத்துக் கொள்ள வாய்ப்புக் கிடைத்ததால் வெகு சந் தோஷத்துடன் இசைந்தேன்.*

*ஸ்ரீமத் பாகவதத்தில் கண்ணன் கோவர்த்தன பர்வதத் தைத் தாங்கிப் பசுக்களைக் காப்பாற்றியதற்காகத் தன்*

கன்றியைத் தெரிவித்துக் கொள்ள காமதேனு அவருக்கு கோவிந்தன் என்ற பெயரைச் சூட்டி தேவந்திரனோடு சேர்ந்து கோவிந்த பட்டாபிஷேகமும் செய்வித்தாள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்தப் பெயர் 'வேதவேத்ய'னை பரம்பொருளுக்கே ஒக்கும் என்று ஆநந்தகிரி அழகாக விளக்குகிறார். அத்வைத ஸித்தாந்தத்தை ஒட்டி இந்த ஸ்தோத்ரம் நிர்க்குண ப்ரஹ்மத்தையே போற்றுகிறது என்று அவர் காட்ட முயன்றது பிடிவாதத்தால் ஏற்பட்ட காரியமன்று. மேலே குறிப்பிட்டதுபோல் அனேக பதங்கள் இந்த விதமேதான் அர்த்தம் செய்வதற்கு இடம் தருகின்றன. அது எப்படியிருந்தாலும், இந்த ஸ்தோத்திரத்தில் பகவானுடைய கல்யாண குணங்களும் போற்றப் படுகின்றன. உண்மையான அத்வைதிகள் ஸகுணப்ரஹ்மத்தின் உபாஸனையில் ஈடுபடாமல் இருக்கமாட்டார்கள் என்பதற்கு பகவத்பாதாசார்யர்களுடைய ஸ்தோத்ரக்ரந்தங்களை விட வேறு அத்தாட்சி வேண்டுமோ?

அவதார தசையிலும் தம் பரத்வத்தை மறைக்காது மாந்தரை உய்விக்க வந்த கண்ணன் புகழைப்பாடும் இந்த ஸ்தோத்ரம் வேதாந்த விஷயங்களைக் குறிப்பாய் உணர்த்துவதால் புரிந்து கொள்வதற்குச் சற்று கடினமானதே. உரையாசிரியருடைய விளக்கத்தை தமிழில் விரிவுக்கு அஞ்சி சுருக்கமாகத் தந்திருக்கிறேன். இருந்தாலும் வாசகர்களுக்குப் பயன்படுமென்று நம்புகிறேன். இந்த ஸ்தோத்ரத்தைப் பாடம் செய்து க்ருஷ்ண பக்தியில் ஈடுபடுவோருக்குப் பரமன் அருள் புரிவானாக.

இந்த வியாக்யானம் கும்பகோணம் அத்வைத ஸபாவினாலும், பம்பாய் வேங்கடேச்வர முத்ராலயத்தாராலும் அச்சிடப்பட்டிருக்கிறது. இந்த இரு பதிப்புகளில் சிற்சில வேற்றுமைகள் காணப்படுகின்றன. என் புத்திக் கெட்டிய வரையில் எந்தப் பாடம் உசிதமாகத் தோன்றியதோ அதை அனுஸரித்திருக்கிறேன்.

நா. ரகுநாதன்




ஸ்ரீ:

## ॥ गोविन्दाष्टकम् ॥

# கோவிந்தாஷ்டகம்

---

सत्यं ज्ञानमनन्तं नित्यमनाकाशं परमाकाशं
गोष्ठप्राङ्गणरिङ्गणलोलमनायासं परमायासम् ।
मायाकल्पितनानाकारमनाकारं भुवनाकारं
क्ष्मामानाथमनाथं प्रणमत गोविन्दं परमानन्दम् ॥

*ஸத்யம் ஞானமனந்தம் நித்யமனுகாசம் பரமாகாசம்*
*கோஷ்டப்ராங்கண ரிங்கணலோலமனுயாஸம் பரமாயாஸம்*
*மாயாகல்பித நாநாகாரமனுகாரம் புவனுகாரம்*
*க்ஷ்மாமாநாத மனுதம் ப்ரணமத கோவிந்தம் பரமானந்தம்.*

இந்த ச்லோகத்தை ஆரம்பமாகக் கொண்ட எட்டு ச்லோகங்கள் அடங்கிய கோவிந்தாஷ்டகம் ஸ்ரீ சங்கர பகவத்பாதரவர்கள் அருளிச் செய்த ஸ்தோத்திரங்களில் முக்கிய இடம் பெற்றுள்ளது. भज गोविन्दम् (பஜ கோவிந்தம்) போன்ற மற்ற ஸ்தோத்திரங்களிலிருந்தும் அத்வைதானுபவத்தில் திளைத்த அவர்களுக்கு ஆயர்தம் கொழுந்தாக அவதரித்த கண்ணனிடம் தனியான ஈடுபாடுண்டு என்பதை நாம் ஊகிக்கலாம். இந்த ஸ்தோத்திரத்திற்கு ஸ்ரீ ஆனந்தகிரி ஒரு வியாக்யானம் செய்திருக்கிறுர். பகவத்பாதரவர்களின் கீதா பாஷ்யத்திற்கு வியாக்யானம் செய்த யதிசிரேஷ்டரே இதையும் செய்தார் என்று நம்ப நல்ல சான்றுகள் இருக்கின்றன.

கோகுலம் முதலிய இடங்களில் செய்த லீலைகளை வருணிக்கும் வகையில் அமைந்த இந்த ஸ்துதி உண்மையில் நிர்குண நிராகாரமான பரவஸ்துவையே பேசுகிறது என்று

இவருடைய வியாக்யானம் ஸ்தாபிக்கிறது. "ஸகல லோகங்களின் க்ஷேமத்தைச் செய்வதற்கே அவதரிக்கும் பகவான் மஹாவிஷ்ணு, பூமியால் விநயமாய்ப் பிரார்த்திக்கப்பட்ட தன் பேரில், பூபாரத்தைக் குறைப்பதற்காக யதுகுலத்தில் உதித்து, ஸநகாதி மஹர்ஷிகளால் இடையறாது புகழப்படும் தமது லீலைகளை நந்தன் மாளிகையில் நடத்தினார். அதே லீலைகளை 'ஸத்யம்' என்று தொடங்கும் எட்டு ச்லோகங்களால் வருணிப்பதன் மூலம் பகவத்பூஜ்யபாத முனிவர், எவ்வித உபாதிகளாலும் விகாரங்களாலும் பாதிக்கப்படாததும், ஸச்சிதாநந்தமாயும், அத்வயமாயுமுள்ள பரமாத்மாவையே துதிக்கின்றார்" என்ற கருத்தைச் சுருக்கமாகத் தம் முகவுரையில் தெரிவிக்கிறார். இப்பொழுது முதல் ச்லோகத்துக்கு அவர் கூறும் பொருளைப் பார்ப்போம்.

அதில் "நிகரற்ற ஆனந்தமயமான கோவிந்தனைப் பூரணமான பக்தி, ச்ரத்தையுடன் மனம் வாக் சரீரம் இவை எல்லாவற்றாலும் பூஜியுங்கள்" என்கிறார் கவி. 'கோவிந்தன்' என்பது யார்? गोभिः=गीर्भिः (கோபி:–கீர்ப்பி:) 'தத்வமஸி' முதலிய மஹா வாக்கியங்களால், विन्दते (விந்ததே) குறிக்கப்படுகிறவன், 'கோவிந்தன்' ஆவன். அவனைப் பூஜிப்பதால் என்ன பலன் என்ற கேள்விக்கு, பரமேச்வர ப்ரஸாதத்தால் 'பரமார்த்தம்' என்ற எல்லாவற்றுக்கும் மேலான பொருளை அடைவதே பலன். அப்பொருள் எத்தகையது? அது सत्यम् (ஸத்யம்), ज्ञानम् (ஞானம்), अनन्तम् (அனந்தம்) என்ற லக்ஷணங்கள் வாய்ந்தது. பரம்பொருள் எப்படி 'ஸத்ய'மாகும்? கிளிஞ்சலைக் கண்டு அது வெள்ளியோ நீரோ என்று நமக்கு முதலில் ஏற்படும் பிராந்தியானது அதன் உண்மையை அறிந்தவுடன் விலகிவிடுவதால், அந்த தடுமாட்டத்தால் உண்டாகும் வெள்ளி முதலான தோற்றங்களை 'அஸத்யம்' என்கிறோம். பரம்பொருளோ இப்படிக் கற்பிதமான வஸ்துவல்ல. அதற்கு மாறுதலும் கிடையாது. ஆகையால்தான் அது 'ஸத்யம்.'

ஆனால் இங்கு ஒரு சந்தேகம் எழலாம். பரம்பொருளின் 'ஸத்ய' நிலையை ப்ரமாணங்களால் (முகாந்தரங்களால், proofs) நிரூபிக்கலாமா? அப்படி நிரூபிக்க முடியுமானால் அது அந்த ப்ரமாணங்களுக்கு 'விஷயம்' (இலக்கு) ஆகிவிடும். எப்படிக் குடம் முதலிய வஸ்துக்கள் 'நாம் பார்க்கிறோம்' என்கிற ப்ரமாணத்துக்கு இலக்காகின்றனவோ அவ்விதமே. ஆனால் ப்ரமாணங்களுக்கு இலக்காகும் குடம் முதலிய வஸ்துக்கள் 'ஸத்ய' மாகா. ஏன்? ஐம்புலன்களாலோ உள்ளத்தாலோ ஒருவன் தன்னினும் வேறாக அறியும் எந்த விஷயமும் அழியக் கூடியதே.

இச் சந்தேகத்தை நிவர்த்தி செய்யவே பரம்பொருள் 'ஞானம்' என்றும் 'அனந்தம்' என்றும் கவியால் வர்ணிக்கப்படுகிறது. பரமாத்மா 'ஸ்வயம்ப்ரகாசம்'. அதை வெளிப்படுத்த இன்னொரு வெளிச்சம் (ப்ரமாணம்) தேவையில்லை. அது ஞானமயமானது. அதைத் தவிர வேறு அறிவு கிடையாததால் அது அறிவுக்கு இலக்காக ஆகாது. மேலும் அது 'அனந்தம்', அதாவது, அது காலத்திலோ (time) இடத்திலோ (space) வஸ்துவிலோ (substance) எல்லையில்லாதது. அது 'தேச' எல்லைக்கு அடங்காதது என்ற உண்மையை,

यच्च किंचिज्जगत्सर्वं दृश्यते श्रूयतेऽपि वा ।
अन्तर्बहिश्च तत्सर्वं व्याप्य नारायणः स्थितः ॥

யச்ச கிஞ்சிஜ் ஜகத் ஸர்வம் த்ருச்யதே ச்ரூயதே-பி வா
அந்தர் பஹிஸ்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ்தித:

என்ற வாக்யம் நிரூபிக்கிறது. கால வரைக்கு அடங்காதது என்பதை, 'அதற்குப் பிறப்புமில்லை இறப்புமில்லை' என்று சொல்லும்

न जायते म्रियते वा कदाचित् ।
ந ஜாயதே ம்ரியதே வா கதாசித்

என்ற வாக்கியத்தால் அறிகிறோம். அதற்கு வஸ்து பரிச்சேதமும் கிடையாது. அதாவது அது குறிப்பிட்ட அளவில் அடங்காதது. ஏனென்றால் பரம்பொருளே ப்ரபஞ்சத்திலுள்ள எல்லாவற்றுக்கும் உபாதான காரணம் (materia cause).

**आदावन्तेऽपि यन्नास्ति वर्तमानेऽपि तत्तथा ।**

*ஆதாவந்தே-பி யந்நாஸ்தி வர்தமானே-பி தத்ததா*

"முதலிலும் முடிவிலும் எது இல்லையோ அது நடுவிலே (இருப்பதாய்த் தோன்றினாலும்) இல்லை என்றே தீரும்" என்ற நியாயப்படி முக்காலத்திலும் இருக்கும் பரம்பொருளைத் தவிர வேறு எப்பொருளும் கிடையாது.

அநாதியான 'அவித்யை'யால் கயிற்றில் பாம்பைக் காண்பது போன்று தோற்றுவிக்கப்படும் ஸகல த்வைத ப்ரபஞ்சமும் பல்வேறாகத் தோற்றமளிக்கும் உலகும் எதை 'அதிஷ்டானமாக' (தோன்றுமிடமாக)க் கொண்டதோ அந்தப் பரம்பொருள் ஒன்றுதான் நித்யம் (அழிவில்லாதது) என்ற உண்மையைக் கவி नित्यम् (நித்யம்) என்ற அடைமொழியால் குறிக்கிறார். नित्यं विभुं (நித்யம் விபும்) என்ற ச்ருதி வாக்யமும் अविनाशि तु तद्विद्धि (அவிநாசி து தத் வித்தி) என்ற கீதா வாக்கியமும் இந்த உண்மைகளைக் குறிக்கின்றன.

அடுத்தாற்போல் கவி பரம்பொருளை अनाकाश (அநாகாசம்) என்றார். யாது காரணம் பற்றி? பரம்பொருள் நித்ய வஸ்து என்று சொன்னோம். அதனிடத்தினின்று ஐந்து 'பூதங்களில்' முதலாவதான 'ஆகாசம்' (வெட்டவெளி) உண்டாகிறது என்று வேதம் கூறுகிறது. 'ஆகாசம்' அழிவுள்ளது. அவ்வித அழிவு பரம்பொருளுக்கில்லை என்று உணர்த்தவே 'அநாகாசம்' என்று அதைச் சுட்டிக் காட்டினார். अन्यतमोवाय्वनाकाशम् (அந்யதமோ வாத்யநாகாசம்) என்ற ச்ருதி வாக்கியமும் பரம்பொருள் ஆகாசத்திலிருந்து வேறுபட்டது

என்றும், அதனுடைய ஸங்கம் (ஸம்பந்தம்) அற்றது என்றும் விளக்குகிறது.

அடுத்தபடி परमाकाश (பரமாகாசம்) என்ற பதத்தைக் கொண்டு, ஜன்மம், நாசம் முதலிய உபாதிகளற்றதால் பரம் பொருள் ஆகாசத்தினின்றும் வேறுபட்டது என்ற கருத்தை (परं—அப்பாற்பட்டது—என்ற பதச் சேர்க்கையால்) விளக்கி னார். आसमन्तात्काशते इत्याकाश: (ஆஸமந்தாத் காசதே இத்யா காச:) 'எங்கும் பிரகாசமானது' என்பது आकाश (ஆகாசம்) என்ற பதத்தின் உட்பொருள். இந்த விஷயத்தில் ஆகாசத் தைவிட அதற்குக் காரணமான முழுமுதற் கடவுள் வெகு மேலானது என்பதையும் எல்லா வெளிச்சங்களுக்கும் கார ணமான வெளிச்சம் அதுவே என்பதையும் 'பரமாகாசம்' என்ற வார்த்தை குறிக்கும். இதையே 'येन सूर्यस्तपति तेजसेद्ध:', 'तमेव भान्तमनुभाति सर्वम्' ("யேந ஸூர்யஸ்தபதி தேஜஸேத்த:" "தமேவ பாந்தமநுபாதி ஸர்வம்") முதலிய ச்ருதி வாக்கியங் கள் சொல்லுகின்றன.

இப்படி 'ஸத்யம்' 'ஞானம்' 'அனந்தம்' ஆகவும் அழி வற்றதாகவும் எல்லைகடந்த தேஜஸ் வாய்ந்ததாகவுமுள்ள பரம்பொருளைத் தகுந்த ஸ்துதிப் பதங்களால் துதிக்க முன் வந்த கவி गोष्ठप्राङ्गणरिङ्गणलोलम् (கோஷ்ட ப்ராங்கண ரிங்கண, லோலம்) என்று ஆரம்பிக்கிறார். "கொட்டிலின் (அதாவது இடையர்களின் குடியிருப்புக்கு) சமீபத்தில் தவழ்ந்து செல் லும் பாலக்ருஷ்ணனைக் குறிக்கும் இப்பதங்களின் உட்கருத் தை ஆனந்தகிரி கீழ்வருமாறு விளக்குகிறார். गाव: (காவ:) காது முதலிய இந்திரியங்கள், तिष्ठन्त्यस्मिन्निति (திஷ்டந்த்யஸ் மிந்நிதி) இதில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன என்பதால் गोष्ठ: (கோஷ்ட:)='சித்'துக்கு அதிஷ்டானமாக (இருப்பிட மாக) உள்ள अहंकारम् (அஹங்காரம்). அதுவே இவனை प्राङ्गण

(ப்ராங்கணம்) வெளிப்படுத்தும் இடம்; அல்லது, இவனுடைய ஆடரங்கு என்றும் வைத்துக் கொள்ளலாம். அந்த அரங்கத்தில் रिङ्गण (ரிங்கணம்) தவழ்ந்து விளையாடல். அந்தர்யாமியாக இருந்து உலகத்தை ஆட்டிவைப்பதே பகவானுடைய விளையாட்டு. இதைத்தான் य आत्मनि तिष्ठन्नात्मानमन्तरो यमयति (ய ஆத்மனி திஷ்டந்நாத்மாந மந்தரோ யமயதி) என்ற ச்ருதி வாக்கியமும் ईश्वरः सर्वभूतानाम् (ஈச்வர: ஸர்வபூதாநாம்) என்ற கீதா வாக்கியமும், தெரிவிக்கின்றன. இவ் விளையாட்டில், लोल (லோலம்) ஈடுபட்ட பகவானைத் துதி என்கிறார்.

இவ்விதம் உலகத்தை ஆட்டிவைப்பதால் அவனுக்குக் களைப்பு உண்டாகுமோ என்று சந்தேகிக்க வேண்டாம். அவனுக்கு ஆயாஸலேசமும் ஏற்படுவதில்லை என்பதை अनायासं (அநாயாஸம்) என்ற பதத்தால் உடனே விளக்குகிறார். எப்படி அயஸ்காந்தக்கல் தான் இருக்குமிடத்திலிருந்தே இரும்புப் பொடியைத் தன்னிடம் இழுக்கின்றதோ அவ்விதமே செய்கை ஒன்றுமில்லாது இருக்குமவன் ஜகத் வியாபாரங்களை நடைபெறச்செய்கிறான்.

ஆனால் உடனே மேலேசொன்னதற்கு நேர்விரோதமாக परमायासम् (பரமாயாஸம்) என்கிறாரே கவி, இது என்ன விபரீதம் என்று நினைக்கலாம். புத்தி தர்மத்தை (அதாவது, கார்யத்தை) தம் மேல் சுமத்திக்கொள்வதால் அவன் 'பரமாயாஸன்' எனப்படுகிறான். परमोऽस्यन्तायासः कर्तृत्वभोक्तृत्वलक्षणः यस्य परमायासः (பரமோ-த்யந்தாயாஸ: கர்த்ருத்வ போக்த்ருத்வ லக்ஷண: யஸ்ய பரமாயாஸ:) "நான் செய்கிறேன்" 'நான் அனுபவிக்கிறேன்' என்ற வகையில் ஸம்ஸார ஸுகதுக்கங்களை எவன் தன் மேல் போட்டுக்கொள்கிறானோ அவனை" என்பது 'பரமாயாஸம்' என்பதன் பொருள். இது ஜீவனுக்குப் பொருந்தும், பகவான் விஷயத்தில் எப்படிப் பொருந்தும்? 'அநாயாஸன்' ஆனவன் பரமாயாஸனாயும் எப்படி இருக்கலாம்? இதற்குச் சமாதானம் பின் வருமாறு. அவன் ஸம்

ஸாரத்தில் ஈடுபடுவது போல் தோன்றுவது மாயாமயமான காரியமானதால் இக் கூற்றில் முன்னுக்குப் பின் விரோதம் இல்லை.

இதைத்தான் मायाकल्पितनानाकारम् (மாயாகல்பிதநாநாகாரம்) என்ற வார்த்தைகளால் கவி விளக்குகிறார். செய்ய முடியாததைச் செய்யும் சக்தி வாய்ந்தது பகவானுடைய மாயை. அதனால் நிர்மாணம் செய்யப்பட்ட பல சரீரங்களை போகஸ்தானமாக (அனுபவத்தைப் பெறும் இடமாக)க் கொண்டவன் பகவான். இந்தச் சரீரங்கள் மாயையால் ஏற்பட்டனவாகையால் அச் சரீரங்களின் ஸம்பந்தத்தால் ஏற்பட்ட ஸம்ஸார அனுபவங்களும் மாயாமயமானவையே, உண்மை அல்ல. ஆனால் 'நாநாகாரம்' (பல உருவங்கள் கொண்ட) என்ற அடைமொழி, நிரூப நிர்குண. அகண்ட பரிபூரண சித்கனமான ப்ரஹ்மத்திற்கு எப்படிப் பொருந்தும்? இந்த ஸந்தேகத்தை अनाकारम् (அநாகாரம்—உருவமற்றவன்) என்ற பதத்தால் தெளிவிக்கிறார். சரீரத்துடன் இருந்தும் அவன் அதன் போகங்களுக்குக் கட்டுப்பட்டவன் அல்லன், முக்தன் என்பதே 'அநாகாரம்' என்பதன் உட்கருத்து.

அவன் 'அநாகாரன்' ஆனால் ब्रह्माद्याः स्थावरान्ताः प्राणिनो मम स्युः (பிரம்மாத்யா ஸ்தாவராந்தா: ப்ராணிநோ மம ஸ்யு:) பிரமன் முதல் புல் பூண்டு வரை எல்லா பிராணிகளும் என்னில் உள்ளன என்ற வேதாந்த வாக்கியம் எப்படிப் பொருந்தும் என்ற இன்னொரு கேள்விக்குப் பதிலே भुवनाकारम् (புவநாகாரம்) என்று அடுத்தாற்போல் கவி உபயோகிக்கும் பதம். ப்ரஹ்மா முதல் ஸ்தம்பம் ஈறாக உள்ள மாயாமயமான ஸர்வ ப்ரபஞ்சமும் எவனுடைய ரூபமோ அவன் भुवनाकारः (புவநாகார:). सर्वत्रास्ते सर्वशरीरी (ஸர்வத்ராஸ்தே ஸர்வசரீரீ) என்ற பகவத்பாதவசனமும் पराऽस्य शक्तिर्विविधैव श्रूयते (பராஸ்ய சக்

திர் விவிதைவ ச்ரூயதே) என்ற வேதவாக்கியமும் இதையே சொல்லுகின்றன.

இப்பேர்ப்பட்ட பகவான் பூமிக்கும் லக்ஷ்மிக்கும் பதி என்பதை क्ष्मामानाथं (க்ஷ்மாமாநாதம்) என்ற பதத்தாலும். அவனை ஆட்கொள்ள வேறொருவருமில்லை என்பதை अनाथं (அநாதம்) (ஸ்வதந்த்ரமானவன்) என்ற சொல்லாலும் புகழ்கிறார். மேலும், அவனையே வேதம் आनन्दो ब्रह्म, अयमात्मा ब्रह्म (ஆநந்தோ ப்ரஹ்ம, அயமாத்மா ப்ரஹ்ம) என்று குறிப்பதால் அந்த பகவானுக்குப் பரமாநந்தன் என்ற அடைமொழி கொடுத்து, கவி அவனையே வணங்க வேண்டுமென்று ச்லோகத்தை முடிக்கிறார்.

---

இரண்டாவது ச்லோகத்துக்கு ஆநந்தகிரியின் பூர்வ பீடிகை: வேதம், मातृमान् पितृमान् आचार्यवान् पुरुषो वेद । (மாத்ருமாந் பித்ருமாந் ஆசார்யவாந் புருஷோ வேத) என்கிறது. அதாவது ஒருவன், தகப்பன், தாய், குரு இவர்களிடமிருந்தே எல்லாவற்றையும் அறிகிறான். ஸர்வேச்வரனுக்கும் இவ்விதம் தாயிடமிருந்து சிக்ஷை கிடைத்தது என்பதைக் குறிப்பதே அடுத்த ச்லோகம்:

मृत्स्नामत्सीहेति यशोदाताडनशैशवसंत्रासं<br>
व्यादितवक्त्रालोकितलोकालोकचतुर्दशलोकालिम् ।<br>
लोकत्रयपुरमूलस्तंभं लोकालोकमनालोकं<br>
लोकेशं परमेशं प्रणमत गोविन्दं परमानन्दम् ॥ २ ॥

ம்ருத்ஸ்நாமத்ஸீஹேதி யசோதாதாடனசைசவஸந்த்ராஸம்<br>
வ்யாதிதவக்த்ராலோகிதலோகா லோகசதுர்தச லோகாலிம்<br>
லோகத்ரயபுர மூலஸ்தம்பம் லோகாலோக மனாலோகம்<br>
லோகேசம் பரமேசம் பிரணமத கோவிந்தம் பரமானந்தம்.

'ம்ருத்ஸ்நாமத்ஸீஹேதி'–'(பால் முதலிய பல ஸம்ருத்தி யான ஆகாரங்கள் வீட்டில் இருக்கையில்) மண்ணைத் தின்ருயே, கிருஷ்ணு!' என்று. 'யசோதா தாடனசைசவஸந்த்ராஸம்'—யசோதை அடித்ததால் உண்டான, சிசுவுக்குச் சுபாவமாயுள்ள பயத்தைக் காட்டுபவனும். 'வ்யாதித'—திறக்கப் பட்ட, 'வக்த்ர'—வாயில், 'ஆலோகித' — காட்டப்பட்ட, 'லோகாலோகசதுர்தசலோகாலிம்'—பூமி முதலிய ஏழு லோகங்கள், நாம் பார்க்க வொண்ணுத 'அதல', 'விதல' முதலிய ஏழு லோகங்கள் ஆகப் பதினுன்கு லோகங்களின் வரிசை, இதைக் காட்டுபவனும்; 'லோகத்ரயபுரமூலஸ்தம்பம்'—மூன்றுலகங்களாகப்பட்ட பட்டணத்தின் இருப்புக்குக் காரணமானவனும், 'லோகாலோகம்' — [கீதையில் பகவான் यदादित्यगतं (யதாதித்யகதம்) என்று சொன்னபடி] ப்ரஹ்மா முதல் தூண் வரையில் எவனுல் பிரகாசிக்கப்படுகிறதோ அவனும்; 'அநாலோகம்'—எவனைப் பார்ப்பதற்கு வேருெருவர் இல்லையோ அவனும் [பார்க்க வேறு ஒருவன் இருந்தால் இவனுடைய சாசுவதத்தன்மை குலைந்துவிடும்; ஆகையால் தான் भीषास्माद्वातः पवते (பீஷாஸ்மாத் வாத: பவதே) இவனிடமுள்ள பயத்தால் காற்று அடிக்கிறது என்கிறது வேதம்.]; 'லோகேசம்' — லோகங்களை, அதாவது வாயு முதலியவைகளைத் தூண்டுபவனும் [वातादयो महावीर्याः स्वतन्त्रा वीर्यशालिनः । तेऽपि भीताः प्रवर्तन्ते ब्रह्मणोऽपि भयं मतम् — (வாதாதயோ மஹாவீர்யா: ஸ்வதந்த்ரா வீர்யசாலிந:. தேபி பீதா: ப்ரவர்தந்தே ப்ரஹ்மணோ–பி பயம் மதம்) என்பது தேவேச்வரர் வசனம்.] 'பரமேசம்' = ப்ரஹ்மா முதலியவர்களையும் தூண்டும் ஸர்வஜ்ஞனும் ஸர்வேச்வரனும்; இப்பேர்ப்பட்ட பரமானந்த கோவிந்தனையே பஜியுங்கள், என்பது இரண்டாவது ச்லோகத்தின் கருத்து.

———

त्रैविष्टपरिपुवीरघ्नं क्षितिभारघ्नं भवरोगघ्नं
कैवल्यं नवनीताहारमनाहारं भुवनाहारम् ।
वैमल्यस्फुटचेतोवृत्तिविशेषाभासमनाभासं
शैवं केवलशान्तं प्रणमत गोविन्दं परमानन्दम् ॥ ३ ॥

*த்ரைவிஷ்டபரிபுவீரக்னம் க்ஷிதிபாரக்னம் பவரோகக்னம்*
*கைவல்யம் நவநீதாஹார மனுஹாரம் புவனுஹாரம்*
*வைமல்யஸ்புட சேதோவ்ருத்தி விசேஷாபாஸ மனுபாஸம்*
*சைவம் கேவல சாந்தம் பிரணமத கோவிந்தம் பரமானந்தம்.*

त्रैविष्टपरिपुवीरघ्नं— (*த்ரைவிஷ்டப ரிபுவீரக்நம்*) *தேவதைகளின் சத்ருக்களில் முக்யர்களான ராவணன் போன்றவர்களைக் கொல்லுகிறவனும் (அல்லது அடக்குகிறவனும்)*; क्षितिभारघ्नं (*க்ஷிதிபாரங்கம்*) *பூபாரத்தைக் குறைப்பவனும். கொடியவர்களைக் கொன்று பூபாரத்தைக் குறைப்பதால் மட்டும் உலகத்திலிருந்து விடுபட முடியுமா என்று சந்தேகிக்க இடமிருக்கிறதல்லவா? ஆகையால்* भवरोगघ्नं (*பவரோகக்நம்*) *"ஸம்ஸாரமான ரோகத்தை நிவ்ருத்தி செய்யும் வைத்யனும்" என்றார் கவி பகவானை. அவன் ஸம்ஸாரத்தை எப்படிப் போக்க வல்லவன் என்றால்,* कैवल्यं (*கைவல்யம்*) *அவன் கைவல்யத்தைத் தருபவன். 'கைவல்யம்' என்பது என்ன? குருவைப் பேணிச் சீடன் 'தத் த்வம் அஸி' முதலிய மஹா வாக்யோபதேசத்தை அவரிடம் பெற்று, சிரவண, மனன, நிதித்யாஸனம் என்ற யோகத்தின் படிகள் மூலம் ஆத்ம ஞானத்தை அடைந்து, அந்த ஞானத்தால் காரிய ப்ரபஞ்சம் (கற்பிதமான இவ்வுலகம்) நசிக்கும்போது கேவலம் ப்ரஹ்ம பாவத்தை அடைகிறான். அதுவே கைவல்யம்*

*பகவானுக்குக் கவி தரும் அடுத்த அடைமொழி* नवनीताहारं (*நவநீதாஹாரம்*) *என்பது. 'வெண்ணெயை உண்பவன்' என்பது இதன் மேலாம்பிடியான பொருள்.* नवेन (*நவேன*)

புதிதான சரீரத்தால். नीतं (நீதம்) அடைவிக்கப்பட்ட லிங்கம்; அதை आहारं (ஆஹாரம்) ஆஹாரமாகப் பெறுபவன். அதாவது. அநுபவிப்பவன்,' என்பதே இப்பதக் கோவையின் உட்கருத்து. அவித்யாவஸ்தையில் ஜீவன் உலகத்தை அநுபவிக்கிறான். இதைத்தான் तयोरेक: पिप्पलं स्वाद्वत्ति (தயோரேக: பிப்பலம் ஸ்வாத்வத்தி) என்ற உபநிஷத் வாக்யமும் குறிக்கிறது. भुवनाहारं (புவநாஹாரம்) என்றால் என்ன? भुवनं (புவநம்)' நாமரூபமயமான ஜகத் என்றும். அது பகவானுக்கு आहारं ஆஹாரம் உணவு. அதாவது, அவனிடம் அது மறைகிறது. என்பதும் இதன் பொருள். கேவலம் சின்மயமாக அவன்மட்டுமே பாக்கி நிற்கிறான் என்று விளக்கப்படுகிறது.

அப்படியானால் அவன் எவ்வகைப்பட்டவன், எவ்விதம் கிடைக்கக் கூடியவன், எங்கே காணக்கூடியவன் என்ற கேள்விகள் எழும். 'கல்மஷமற்ற புத்தியில், ஆசார்யமுகமாக உபதேசம் அடைந்து. அவரனுக்ரஹம் பெற்றவர்களுக்குத் தோன்றுவான்' என்பது பதில். वैमल्येन (வைமல்யேந) ஆசை முதலியன ஒழிவதால், स्फुटा (ஸ்புடா) தெளிவு பட்ட, चेतोवृत्तिः (சேதோவ்ருத்தி:) புத்தியின் நிலையில், विशेषेण (விசேஷேண) அபரோக்ஷமாக, அதாவது. நேரடியாகப் பெறும் ஞானமாக. आभासं (ஆபாஸம்) உதிப்பவனை, என்பது वैमल्यस्फुटचेतोवृत्तिविशेषाभासं (வைமல்ய ஸ்புட சேதோவ்ருத்தி விசேஷாபாஸம்) என்ற தொடரின் பொருள்.

அப்படிப் புத்தியால் க்ரஹிக்கக்கூடியவனானால் அவன் ஜடவஸ்துவோ? இவ்விதம் சந்தேகிக்காவண்ணம் अनाभासं (அநாபாஸம்) என்கிறார் கவி. உடனே यस्यामतं तस्य मतम् (யஸ்யாமதம் தஸ்ய மதம்) என்ற வேதவாக்யம் குறிப்பதுபோல், அவன் பார்க்கப்படாதவன்; அதாவது. நிச்சயமாக அறிவுக்கு இலக்காக, 'இவன் இன்னவன்' என்றுதெளிவதற்கு இயலாத வகையிலே புலப்படுபவன் என்பதே अनाभासं (அநாபாஸம்)

என்ற பதத்தின் கருத்து. 'न तत्र चक्षुर्गच्छति न वाग्गच्छति नो मनो न विद्मः (ந தத்ர சக்ஷுர்கச்சதி ந வாக்கச்சதி நோமனோ ந வித்ம:) "அங்கே கண் செல்வதில்லை; அது வாக்குக்கும் எட்டாதது. அதை நாம் அறியவொண்ணாது" என்பது ச்ருதி. இதிலிருந்து பரம்பொருள் தாமாகவே நமது மனத்தில் ஸ்புரித்தால்தான் உண்டு என்று ஏற்படுகிறது. அவ்விதம் அவன் அருள்புரிவதால் கவி பகவானை शैवं 'சைவம்' என்றார். ஏனென்றால், அவன் केवलशान्तं. (கேவலசாந்தம்.) साक्षी चेता केवलो निर्गुणश्च (ஸாக்ஷீ சேதா கேவலோ நிர்குணஸ்ச) என்கிறது வேதம். ஸம்ஸாரக் கொந்தளிப்பை அடக்கிக் கேவலம் சின்மாத்ரமாக நிற்பவன். यत्र त्वस्य सर्वमात्मैवाभूत्तत्केन कं पश्येत् केन कम् (யத்ர த்வஸ்ய ஸர்வ மாத்மைவாபூத் தத் கேநகம் பச்யேத் கேந கம்) மோக்ஷநிலையில் ஆத்மாவானது, தர்சனம் (பார்வை) க்ரியா (கார்யம்) இவைகள் அற்று நிற்பதால் அது கேவலம் சித்ரூபமாயுள்ளது என்ற பாவம் இங்கே கூறப்படுகிறது. இப்பேர்ப்பட்ட பரமானந்த கோவிந்தனைத் தொழுவோம் என்பது இந்தச்லோகத்தின் பொருள்.

---

गोपालं प्रभुलीलाविग्रहगोपालं कुलगोपालं
गोपीखेलनगोवर्धनधृतिलीलालालितगोपालम् ।
गोभिर्निगदितगोविन्दस्फुटनामानं बहुनामानं
गोधीगोचरदूरं प्रणमत गोविन्दं परमानन्दम् ॥ ४ ॥

கோபாலம் ப்ரபுலீலா விக்ரஹ கோபாலம் குலகோபாலம்
கோபீகேளந கோவர்த்தனத்ருதி லீலா லாலித கோபாலம்
கோபிர் நிகதித கோவிந்த ஸ்புடநாமானம் பஹுநாமானம்
கோதீ கோசரதூரம் ப்ரணமத கோவிந்தம் பரமானந்தம்.

பகவான் கேவலம் சித்ரூபனாக இருக்கும் பக்ஷத்தில் பக்தர்களுக்கு எவ்விதம் அருள் புரிவான் என்று எண்ணிக்

கலங்க வேண்டாம். மனத்தாலும் மாந்தர் எட்டிப் பார்க்க முடியாத சக்திவாய்ந்தவனானதால், தன் இஷ்டம்போல் உலகத்தில் அவதரித்து லீலைகளைப் புரிய வல்லான் என்பதைக் குறிக்கவே, गोपालं (கோபாலம்) கோப வேஷத்தோடு பசுக்களைப் காப்பவன் என்றார். प्रभुः (ப்ரபு:) ஒன்றைச் செய்வதற்கும், அழிப்பதற்கும், மாற்றிச் செய்வதற்கும் சக்தியுள்ளவன். ஆகையாலேயே लीलया (லீலயா) தன் இச்சையால் (எடுத்துக்கொள்ளப்பட்ட) विग्रह (விக்ரஹ) சரீரம்; அதைக்கொண்டு गां (காம்) வேதம், யஜ்ஞம் முதலியவைகளை पा (பாலம்) காப்பவன். कुलगोपालं (குலகோபாலம்) என்ற பதம் பின்வருமாறு பிரித்துப் பொருள் கொள்ளப்படுகிறது. कौ (கௌ) பூமியில், लीयते (லீயதே) மறைகிறது. என்பதால் 'குலம்' சரீரத்தைக் குறிக்கும்; அதையும் गोश्च (கோஸ்ச) இந்திரியங்களையும், पालयति (பாலயதி) காப்பவன். ஸுஷுப்தி, (ஆழ்ந்த தூக்கம்) மூர்ச்சை இந்த நிலைகளில் இருக்கும் ஒருவனைப் பற்றி அவன் இறந்துவிட்டான் என்று மனிதர் எண்ணுகிறபடி, சரீரத்துடன் பிராணனைக் காப்பவன் பகவான் என்பது இத்தொடரின் தாத்பர்யம். गोपीखेलन गोवर्धनधृतिलीलालालितगोपालं (கோபீகேலந கோவர்த்தநத்ருதி லீலாலாலித கோபாலம்) கோபியருடன் விளையாட வனம் சென்றபோது பெருமழையினின்று அவர்களை ரக்ஷிக்க, கோவர்த்தன மலையை விளையாட்டாகவே தூக்கி அவர்களைக்காத்தவன். गोभिः (கோபி:) अस्यजानतो विद्धि चक्र नमस्ते विष्णो सुमतिं भजामहे (அஸ்ய ஜாநதோ வித்தி சக்ர நமஸ்தே விஷ்ணோ ஸுமதிம் பஜாமஹே) முதலிய வேதவாக்யங்களால், निगदितं (நிகதிதம்) பேசப்பட்டவனும், गोविन्दस्फुटनामानं (கோவிந்த ஸ்புட நாமானம்) 'கோவிந்தன்' என்ற பிரசித்தமான பெயருடையவனும், बहुनामानं (பஹுநாமாநம்) எண்ணிறந்த பெயர்கள் உள்ளவனும். सर्वाण्येतानि नामानि परस्य ब्रह्मणो हरेः (ஸர்வாண்யேதானி நாமானி பரஸ்ய ப்ரஹ்மணோ ஹரே:) உலகத்தில் வழங்கும் எல்லா தெய்வங்களின் பெயர்களும் பரப்ரஹ்மமான ஹரியின் பெயர்களே என்பது புராண வசனம்.

இப்படி நாமரூபஸம்பந்தம் இருந்தால் பகவான் அஸங்கன் (பற்றற்றவன்) ஆக எப்படி இருப்பான் என்று சந்தேகிக்காதபடி गोधीगोचरदूरं (கோதீகோசர தூரம்) வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாது அப்பால் நிற்பவன் என்கிறார். நிர்மலமாயும் நிஷ்களமாயும் பரமாநந்த ரூபமாயுமுள்ள ப்ரஹ்மத்தில், ஸம்ஸாரத்தில் சிக்குவதற்குக் காரணமான ஜாதி, குணம், க்ரியை இவை ஏற்பட முடியாததால் மனத்தாலும் எட்டமுடியாத பொருள் என்கிறது வேதம்.

---

அடுத்த ச்லோகத்திற்கு ஆனந்தகிரியின் பூர்வ பீடிகை பின்வருமாறு: வாக்காலும் மனத்தாலும் அவனை அடைய முடியாது என்றால், तं त्वौपनिषदं पुरुषं पृच्छामि (தம் த்வௌபநிஷதம் புருஷம் ப்ருச்சாமி) 'உபநிஷத்தால் விளக்கப்பட்ட பரம புருஷனைப் பற்றி உம்மை வினவுகின்றேன்' என்ற உபநிஷத் வாக்யம், உபநிஷத்தின் உபதேசத்தால் பரம்பொருளை அறியலாம் என்று கூறுகிறதே, அது அர்த்தமில்லாமலல்லவோ ஆகிவிடும் என்ற சந்தேகம் நிகழலாம். அதை நீக்க, ஆத்மாவினிடத்தில் அவித்யையால் சுமத்தப்பட்ட அந்த அந்தத் தர்மத்தை (அதாவது, பலவேறு கற்பிதமான இயல்புகளை) நிராகரிப்பதன் மூலம் ஓரளவு பரம்பொருளை அறியலாம் என்ற அபிப்பிராயத்துடன்தான் முந்திய ச்லோகம் சொல்லப்பட்டது என்பதை ஐந்தாவது ச்லோகம் விளக்குகிறது. பரம்பொருளை நேர்முகமாக அறியமுடியாது என்றாலும், எதெல்லாம் அது அல்ல என்று விளக்குவதால் அதை மறைபொருளாகச் சுட்டிக் காட்டுவதே உபநிஷத்துக்கள் கையாளும் வழி.

गौरीमण्डलगोष्ठीमेदं भेदात्रस्थमभेदाभं
श्वश्रूगोत्रुनिर्धूगोद्राधूष्टीभूरसौभाग्यम् ।

श्रद्धाभक्तिगृहीतानन्दमचिन्त्यं चिन्तितसद्भावं
चिन्तामणिमणिमानं प्रणमत गोविन्दं परमानन्दम् ॥ ५ ॥

கோபீ மண்டல கோஷ்டீபேதம் பேதாவஸ்த மபேதாபம்
சஸ்வத் கோகுரநிர்த்தூதோத் தததூலீ தூஸர
ஸௌபாக்யம்
ச்ரத்தா பக்தி க்ருஹீதானந்த மசிந்த்யம் சிந்திதஸத்பாவம்
சிந்தாமணி மணிமானம் ப்ரணமத கோவிந்தம் பரமானந்தம்.

गोपीमण्डलगोष्ठीभेदं (கோபீமண்டலகோஷ்டீபேதம்) "ராஸக்ரீடைக்காகக் கோபியர் கூட்டத்தோடு கலந்து அணி வகுத்து விளையாடுபவனும்"; भेदावस्थं (பேதாவஸ்தம்)—அப்படி விளையாடுகையில் பலபேராக நிற்பவனும்; [ராஸக்ரீடையில் ஒவ்வொரு கோபியின் பக்கத்திலும் ஒவ்வொரு கிருஷ்ணனாகக் காணப்பட்டான் அல்லவா? தத்வதசையில் பார்த்தால் रूपं रूपं प्रतिरूपो बभूव (ரூபம் ரூபம் ப்ரதிரூபோ பபூவ) என்ற ச்ருதி வாக்யப்படி வெவ்வேறு உபாதிகளின் சேர்க்கையால் பரமாத்மா ஒருவனேயானாலும் வெவ்வேறாகக் காணப்படுகிறான்.] अभेदाभं (அபேதாபம்) உண்மையிலே பேதமற்றவனும்; शश्वद्गोखुरनिर्धूतोद्धतधूलीधूसरसौभाग्यं (சச்வத்கோகுரநிர்த்தூதோத்ததூளீதூஸரஸௌபாக்யம்) "ஓயாது பசுக்களின் குளம்புகளால் எழுப்பப்பட்ட புழுதி படிந்து, அதனால் தோன்றிய இலேசான வெளுப்பே யாருக்கு அழகு செய்ததோ அவனும்"; श्रद्धाभक्तिगृहीतानन्दं (ச்ரத்தாபக்திக்ருஹீதாநந்தம்)—ச்ரத்தை, பக்தி இவைகளின்மூலம் முக்தர்களான சிலரால் அடையப்பட்ட ப்ரஹ்மநிர்வாணம் என்ற பரமஸுகம் எவனோ அவனும்; [अज्ञश्चाश्रद्दधानश्च संशयात्मा विनश्यति । भक्त्या मां अभिजानाति (அஜ்ஞஸ்சாச்ரத்ததானஸ்ச ஸம்சயாத்மா விநச்யதி, பக்த்யா மாம் அபிஜாநாதி) என்ற கீதா வாக்யங்களை இங்கு நினைவுக்குக் கொண்டு வரவேண்டும்.] அப்படி

அடையக்கூடும் நிலையில் அவன் இருந்தால் அவன் ஜடப் பொருளோ என்ற சந்தேகத்தைத் தவிர்க்கக் கவி உடனே **मचिन्त्यं** (அசிந்த்யம்) மனத்திற்கு எட்டாதவன் என்றார். [अव्यक्तोऽयमचिन्त्योऽयमविकार्योऽयमुच्यते (அவ்யக்தோ-யமசிந்த்யோ-யமவிகார்யோ-யமுச்யதே) என்பது பகவத்கீதையின் வசனம்.] மனத்தாலும் எட்டக்கூடாதவன் என்றால் முயற் கொம்புபோல் உண்மையிலேயே அவன் இல்லாத வஸ்துவோ என்று எண்ணுதபடி அடுத்த அடைமொழி ஏற்பட்டது. **चिन्तितसद्भावं** (சிந்தித ஸத்பாவம்) यतो वा इमानि भूतानि जायन्ते, येन जातानि जीवन्ति, यत्प्रयन्त्यभिसंविशन्ति तद्विजिज्ञासस्व तद्ब्रह्मेति; कोह्येवान्यात्कः प्राण्यात् यदेष आकाश आनन्दो न स्यात् एष ह्येवानन्दयाति (யதோவா இமானிபூதானி ஜாயந்தே, யேந ஜாதானி ஜீவந்தி, யத்ப்ரயந்த்யபிஸம்விசந்தி தத்விஜிஞாஸஸ்வ தத்ப்ரஹ்மேதி; கோஹ்யேவாந்யாத்க: ப்ராண்யாத் யதேஷ ஆகாச ஆநந்தோ ந ஸ்யாத் ஏஷஹ்யேவாநந்தயாதி) முதலிய ச்ருதி வாக்யங்களால் எவனுடைய ஸத்தை (சாச்வதமான உண்மை) தீர்மானிக்கப் பட்டிருக்கிறதோ அவனும், என்பது இதன் பொருள். **चिन्तामणिं** (சிந்தாமணிம்)—நினைத்ததை எல்லாம் கொடுக்க வல்லவனும்; **अणिमानं** (அணிமானம்)— அதிஸூக்ஷ்மமானவனும், ஆகையாலேயே இவன் இத்தகையவன் என்று தர்க்கிக்க இயலாதவனும்; இவ்விதமான கோவிந்தனைப் பேணுங்கள் என்பது இந்த ச்லோகத்தின் கருத்து.



ஆறாவது ச்லோகத்திற்கு ஆனந்தகிரியின் அவதாரிகை: "**जक्षन् क्रीडन् रममाणः स्त्रीभिर्यानैर्वा**" (ஜக்ஷன், க்ரீடன் ரமமாண: ஸத்ரீபிர்யானைர்வா) (உண்டும் விளையாடியும் ஸ்திரீக்களுடனும் வாகனங்களுடனும் குதூஹலமாய்க் காலங்கழிப்பவன்) என்று ஜீவன்முக்தனின் லக்ஷணம் வேதத்தில் காணப்படுகிறது. அதே விதம் பகவான் விளையாடுகிறான் என்கிறது இந்த ச்லோகம்.

**स्नानव्याकुलयोषिद्वस्त्रमुपादायागमुपारूढं**
**व्यादित्सन्तीरथ दिग्वस्त्रा दातुमुपाकर्षन्तं ताः ।**
**निर्धूतद्वयशोकविमोहं बुद्धं बुद्धेरन्तस्थं**
**सत्तामात्रशरीरं प्रणमत गोविन्दं परमानन्दम् ॥ ६ ॥**

*ஸ்நானவ்யாகுல யோஷித்வஸ்த்ர முபாதாயாக முபாரூடம்*
*வ்யாதித்ஸந்தீரத திக்வஸ்த்ரா தாதுமுபாகர்ஷந்தம் தா:*
*நிர்த்தூதத்வய சோக விமோஹம் புத்தம் புத்தேரந்தஸ்தம்*
*ஸத்தாமாத்ர சரீரம் ப்ரணமத கோவிந்தம் பரமானந்தம்.*

स्नान....रूढं—(ஸ்நாந...ரூடம்) மார்கழிமாதம் காலையில் நீராடும் போது குதூஹலமாக ஜலத்தில் விளையாடிக்கொண்டிருந்த ஸ்திரீக்களின் வஸ்திரங்களை எடுத்துக்கொண்டு மரத்தில் ஏறினவனும் [कदम्बवृक्षमधिरूढमच्युतं (கதம்பவ்ருக்ஷமதிரூடமச்யுதம்) என்பது ஆகமம்.]; व्यादित्सन्तीः...ताः (வ்யாதித்ஸந்தீ:—தா:) நிர்வாணமாயிருந்த அவர்கள் தங்கள் துணிகளைத் திரும்பப் பெறத் துடித்ததால் தன்னிடம் அவர்களை வரும்படி இழுத்தவனும், ஆனால் இதிலிருந்து அவன் ஸ்த்ரீலோலன், ஆகையால் நிறைவற்றவன் என்று எண்ணலாகாது; இதற்காகவே निर्धूतद्वयशोकविमोहं (நிர்த்தூதத்வயசோகவிமோஹம்)—சோகம், மோஹம் இரண்டையும் புறக்கணித்தவன் என்றார் கவி. बुद्धं (புத்தம்)—விழிப்போடு கூடியவன். (விழிப்பற்றவர்களுக்கே விஷய ஸுகத்தில் கட்டுப்படும் நிலை ஏற்படும்.) बुद्धेरन्तस्थं (புத்தேரந்தஸ்தம்) मनसस्तु परा बुद्धिः (மநஸஸ்து பரா புத்தி:) முதலிய வாக்யங்களிலிருந்து புத்திக்கும் உள்ளிருந்தும், அதிலிருந்து வேறுபட்டவனாகவும் கேவலம் ஸாக்ஷியாகவும் நிற்பவன். सत्तामात्रशरीरं (ஸத்தாமாத்ரசரீரம்)—சுத்த ஸத்தையையே சரீரமாகக் கொண்டவன்; அந்தப் பரமானந்த கோவிந்தனை வணங்குங்கள்.

———

அடுத்த ச்லோகத்தில், परित्राणाय साधूनां (பரித்ராணாய ஸாதூநாம்) என்று பகவான் சொன்னபடி, உலகைக் காப்பாற்ற யது குலத்தில் அவதரித்த பரம மங்களமான ரூபத்தோடும் அருளோடும் கூடிய பரமாத்மாவைக் கவி வருணிக்கிறார், என்கிறார் ஆனந்தகிரி.

कान्तं कारणकारणमादिमनादिं कालघनाभासं
कालिन्दीगतकालियशिरसि नृत्यन्तं मुहुर्नृत्यन्तम् ।
कालं कालकलातीतं कलिताशेषं कलिदोषघ्नं
कालत्रयगतिहेतुं प्रणमत गोविन्दं परमानन्दम् ॥ ७ ॥

காந்தம் காரண காரணமாதிமநாதிம் காலகநாபாஸம்
காளிந்திகத காளிய சிரஸி ந்ருத்யந்தம் முஹுர்ந்ருத்யந்தம்
காலம் கால கலாதீதம் கலிதாசேஷம் கலிதோஷக்னம்
காலத்ரயகதி ஹேதும் ப்ரணமத கோவிந்தம் பரமானந்தம்.
('ஸந்ருத்யந்தம் முஹுரத்யந்தம்' என்ற பாடமும் காணப்படுகிறது.)

कान्तं — (காந்தம்) மனத்தைத் தன் அழகால் கவருபவனும்; कारणकारणं = (காரண காரணம்) ஜகத்துக்குக் காரணமான ப்ரக்ருதிக்கு அதிஷ்டானமாயிருப்பவனும் [இந்தத் தத்துவத்தைத்தான் मायां तु प्रकृतिं विद्यान्मायिनं तु महेश्वरम् (மாயாம் து ப்ரக்ருதிம் வித்யாந்மாயிநம் து மஹேச்வரம்) என்ற ச்ருதி வெளிப்படுத்துகிறது.] आदिं =(ஆதிம்) ஜகத்துக்கு உபாதான காரணமானவனும்; [ब्रह्म वा इदमग्र आसीत् (ப்ரஹ்மவா இதமக்ர ஆஸீத்) முதலிய வேத வசனங்கள் இதையே சொல்லுகின்றன.] अनादिं — (அநாதிம்) தனக்குக் காரணமாக வேறு எதுவும் இல்லாதபடி ஸ்வதஸ்ஸித்தனானவனும்; कालघनाभासं — (காலகநாபாஸம்) கார்மேகத்தின் மேனி வாய்ந்தவனும்; कालिन्दी...नृत्यन्तं — (காளிந்தீ ... ந்ருத்யந்தம்) யமுனையிலிருந்த காளிய ஸர்ப்பத்தின் தலையில்

இடையருது நர்த்தனம் செய்தவனும்; कालं — (காலம்) உல கத்தை ஸம்ஹாரம் செய்யும் காலனும்; कालकलातीतं — (கால கலாதீதம்) சென்ற காலம், நிகழ் காலம், வருங்காலம் என்ற முக்காலமானதும், நிமிஷம் முதலிய பிரிவுகளுடை யதுமான காலத்திற்கு எவன் கட்டுப்பட்டவன் அல்லனோ அவனும். [अत्यतिष्ठद्दशाङ्गुलं (அத்யதிஷ்டத் தசாங்குலம்) முத லிய ச்ருதிகள் இதை ஸூசிப்பிக்கின்றன. காலத்தைக் கடந் தவன் பகவான் என்றால் காரிய காரணங்களின் ஸம்பந்த மற்றவன் என்பது கருத்து.] कलिताशे (கலிதாசேஷம்)— (அப்படியிருந்தாலும்) ஸம்ஸாராவஸ்தையில் ஸமஸ்த ஜீவர் களும் எவனால் பந்தத்துக்கு உட்படுத்தப்படுகிறார்களோ அவனும்; [तस्य वाक्तन्ती नामानि दामानि तस्येदं वाचा तन्त्या नामभिर्दामभिः सर्वं सितम् (தஸ்ய வாக்தந்தீ நாமாநி தாமாநி தஸ்யேதம் வாசா தந்த்யா நாமபிர் தாமபி: ஸர்வஸிதம்) என்பது ச்ருதி. பக்தர்களல்லாதவருக்கு பயத்தை உண்டுபண்ணுபவன் என் பது கருத்து.] कलिदोषघ्न —(கலிதோஷக்நம்) பக்தர்களுக்கோ, விஹித கர்மாவைச் செய்யாமலும் விலக்கப்பட்ட கர்மாவைச் செய்வதுமான கலியில் ஏற்படக் கூடிய தோஷங்களை இவனை நினைத்த மாத்திரத்தில் தொம்சம் செய்பவனும்; कालत्रयगतिहेतुं — (காலத்ரயகதிஹேதும்) ஸூர்யனாக இருந்து மூன்று சந்திகளுக்கும் காரணமாக இருப்பவனுமான பர மானந்த கோவிந்தனை பஜியுங்கள்.

இந்த ச்லோகத்தின் வியாக்யானத்தில் கண்ணனுடைய மோஹன ரூபத்தை வருணிக்க ஆனந்தகிரி 'ரஹஸ்யாகமம்' என்று குறிக்கும் நூலிலிருந்து,

**आर्द्रेक्षुचापमवलंबितपुष्पबाणमारक्तनेत्रमपरोध्दृतशङ्खचक्रम् ।**
**विन्यस्य वेणुमधरे सुनिनादयन्तं संमोहयन्तमिह पाशसृणी वहन्तम् ॥**

ஆர்த்ரேக்ஷு சாப மவலம்பித புஷ்பபாண மாரக்தநேத்ர
மபரோத்ருத சங்க சக்ரம்
விந்யஸ்ய வேணுமதரே ஸுநிநாதயந்தம் ஸம்மோகஹயந்த
மிஹ பாசஸ்ருணீ வஹந்தம்

என்ற ச்லோகத்தைத் தருகிறார். "கரும்பையும் புஷ்பங்களையும் பாணமாகக் கொண்ட மன்மதனை ஒத்த அழகும், செந்தாமரைக் கண்ணும் படைத்து, சங்கத்திற்கும் சக்கரத்திற்கும் பதிலாக ஏந்திய தார்க் கொம்பும் கயிறும் அலங்கரிக்க, குழலை ஊதி உலகத்தை மயக்குபவன்" என்பது பொருள்.

कदाचिदाद्यो ललितः पुरुषः कृष्णविग्रहः
वंशीनादविनोदेन करोति विवशं जगत् ॥

கதாசிதாத்யோ லலித: புருஷ: க்ருஷ்ணவிக்ரஹ:
வம்சீநாதவிநோதேந கரோதி விவசம் ஜகத்

"ஒவ்வொரு சமயத்தில் க்ருஷ்ணரூபமானவனும் ஸௌந்தர்யத்துக்கு இருப்பிடமாயுமுள்ள பரமாத்மா குழலோசையால் ஜகத்தை மெய்மறக்கச் செய்கிறான்" என்கிறது இன்னொரு ச்லோகம்.

எவ்விதப் பாவத்தைச் செய்தவனும் கலியில் கோவிந்தனை ஸ்மரித்தால் அவன் பாவங்கள் நசித்து அவன் நற்கதி அடைகிறான் என்பதற்கு ஆனந்தகிரி கீழ்க்கண்ட ச்லோகங்களைச் சான்றாகக் காட்டுகிறார்.

कलावत्रापि दोषाढ्ये विषयासक्तमानसः ।
कृत्वा तु सकलं पापं गोविन्दस्मरणाच्छुचिः ॥
अतिपापप्रसक्तोऽपि ध्यायन्निमिषमच्युतम् ।
भूयस्तपस्वी भवति पङ्क्तिपावनपावनः ॥

கலாவத்ராபி தோஷாட்பே விஷயாஸக்த மாநஸ:
க்ருத்வா து ஸகலம் பாபம் கோவிந்தஸ்மரணச்சுசி:
அதிபாப ப்ரஸக்தோ-பி த்யாயந் நிமிஷமச்யுதம்
பூயஸ்தபஸ்வீ பவதி பங்திபாவந பாவந:

"கணக்கற்ற தோஷங்கள் நிரம்பிய இக்கலியில் சிற்றின்பத்தில் உள்ள அவாவால் வெகு பாபங்களைச் செய்தவனும் கோவிந்தனை நினைத்த மாத்திரத்தில் பரிசுத்தனாகி, ஸமஸ்த தபசின்பலனைப் பெற்று பிறரையும் பரிசுத்தமாக்கும் ஆற்றல் படைக்கிறான்."

கடைசி ச்லோகத்தில், நரனாக வேஷம் போட்டு ஆடுகையிலும் ஸமஸ்த தேவர்களும் தன்னை வணங்கும் வகையில் நடித்த வ்ருந்தாவன கோவிந்தனைத் துதிக்கிறார்.

वृन्दावनभुवि वृन्दारकगणवृन्दाराधितवन्द्येहं
कुन्दाभामलमन्दस्मेरसुधानन्दं सुहृदानन्दम् ।
वन्द्याशेषमहामुनिमानसवन्द्यानन्दपदद्वन्द्वं
वन्द्याशेषगुणाब्धिं प्रणमत गोविन्दं परमानन्दम् ॥८॥

ப்ருந்தாவனபுவி ப்ருந்தாரககணவ்ருந்தா ராதிதவந்த்யேஹம்
குந்தாபாமல மந்தஸ்மேர ஸுதானந்தம் ஸுஹ்ருதானந்தம்
வந்த்யாசேஷ மஹாமுனி மானஸவந்த்யானந்த
பதத்வந்த்வம்
வந்த்யா சேஷ குணாப்திம் ப்ரணமத கோவிந்தம்
பரமானந்தம்

"வ்ருந்தாவன ப்ரதேசத்தில் ராஸக்ரீடை நடக்கையில் தேவர்கள் கூட்டங் கூட்டமாக வந்து எவனுடைய மகோன்னதமான விளையாட்டைப் புகழ்ந்தார்களோ; குந்த புஷ்பத்தின் காந்தியை ஒத்த காந்தியுடன் வசீகர மந்தஹாஸமும்

சேர்ந்ததால் உண்டான அம்ருதத்தை எவன் வாரி வழங்கிறுனே; பண்பட்ட சித்தமுள்ள முக்தர்களுக்கு எவன் ஆனந்தத்தைத் தருகிருனே; எல்லோராலும் வணங்கப் பட்ட நாரதாதி மஹர்ஷிகளால் எவனுடைய ஆனந்தமய மான பாதங்கள் ஹ்ருதயத்தில் தாங்கப்படுகின்றனவோ; எவன் போற்றப்படும் ஸமஸ்த கல்யாண குணங்களுக்கும் இருப்பிடமோ அந்தப் பரமானந்த கோவிந்தனை பஜியுங்கள்.'' (நான்காவது வரியில் 'வந்த்யா சேஷகுணுதிம்' என்ற பாடத்தை வைத்துக் கொண்டால், ''எவனுலே அசேஷ கல்யாண குணங்களும் பூர்த்தியடைகின்றனவோ'' என்று பொருள்படும்.)

''காமனையோடு இந்தக் கோவிந்தாஷ்டகத்தைப்படிப்ப வர் தமது விருப்பத்தை அடைவார்கள், காமனையில்லாமல் இதை அநுபவிப்பவர் என்னையே அடைவர்'' என்று கோவிந்தன் சொல்லுவதாக அமைகிறது கீழ்க்கண்ட பல ச்ருதி ச்லோகம், என்று முடிக்கிருர் ஆனந்தகிரி.

गोविन्दाष्टकमेतदधीते गोविन्दार्पितसञ्चेता
गोविन्दाङ्घ्रिसरोजध्यानसुधाजलधौतसमस्ताघः ।
गोविन्दाच्युत माधव विष्णो गोकुलनायक कृष्णेति
नित्यं गायन् यास्यति भक्तो गोविन्दं परमानन्दम् ॥९

கோவிந்தாஷ்டக மேததீதே கோவிந்தார்ப்பிதஸஞ்சேதா
கோவிந்தாங்க்ரி ஸரோஜத்யான ஸுதாஜலதௌத
ஸமஸ்தாகஃ
கோவிந்தாச்யுத மாதவ விஷ்ணோ கோகுலநாயக க்ருஷ்ணேதி
நித்யம் காயன யாஸ்யதி பக்தோ கோவிந்தம் பரமானந்தம்.

**கோவிந்தாஷ்டகம் ஸம்பூர்ணம்.**

ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
ஸ்ரீசந்த்ரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்ரீசரணர்
பீடாரோஹண அறுபதாண்டு நிறைவு வெளியீடுகள்

---

## ஸ்ரீசங்கரபகவத்பாதர் அருளிய ஸ்தோத்ரநூல்கள்

✓ கணேச பஞ்சரத்னம்
✓ கனகதாரா ஸ்தோத்ரம்
✓ மீனாக்ஷி பஞ்சரத்னம்
✓ கோவிந்தாஷ்டகம்
✓ பவானி புஜங்கம்
✓ தேவி அபராதக்ஷமாபண ஸ்தோத்ரம்
சுப்ரஹ்மண்ய புஜங்கம்
சிவபஞ்சாக்ஷர ஸ்தோத்ரம்
உமாமஹேச்வர ஸ்தோத்ரம்
தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்
சிவபுஜங்க ஸ்தோத்ரம்
✓ அன்ன பூர்ணாஷ்டகம்
கங்காஷ்டகம்
ரங்கநாதாஷ்டகம்
அச்யுதாஷ்டகம்
பாண்டுரங்காஷ்டகம்
ஹரிமீடே
ஸ்ரீசந்த்ரமௌளீச்வராஷ்டகம்
தசச்லோகி ஸ்துதி
ஸ்ரீராம புஜங்கம்
காலபைரவஷ்டகம்
வேதபாதஸ்தவம்
சிவபாதாதி கேசாந்த வர்ணன ஸ்தோத்ரம்
சிவகேசாதி பாதாந்த வர்ணன ஸ்தோத்ரம் மற்றும்
✓ சியாமளா தண்டகம்
ஆதித்யஹ்ருதயம்
✓ சந்திரசேகராஷ்டகம்
நடேசாஷ்டகம்
✓ மஹிஷாஸுர மர்த்தினிஸ்துதி
நவக்ரஹஸ்தோத்ரம்
ஸம்க்ஷேப ராமாயணம்
காயத்ரீ ராமாயணம்
ஸ்ரீராகவாஷ்டகம்
திருபுரஸுந்தரி அஷ்டகம்

ஒவ்வொன்றும் ஸம்ஸ்கிருத மூலமும் தமிழில் பதவுரை பொழிப்புரையுடன் கூடியது.

---

வெளியிடுபவர் :
ஏ. கே. ஜயராமன்
ஜோதி நிலயம்
சென்னை—18